

சரவணபவ.

# - மேலைக் -
# கொழுந்துமாமலைக்
# குமரன்
# பிள்ளைத் தமிழ்.




ஆக்கியோர்: வீரைக்கவிஞர்.
கா. ந. நெல்லையப்பர்,
வீரவநல்லூர்.

விகிருதி வருடம்.] [விலை 0--9--0.

வெளியீடு 8. உரிமை ஆசிரியரது.

சரவணபவ.

# மேலைக் கொழுந்துமாமலைக் குமரன் பிள்ளைத் தமிழ்.

மேலைக் கொழுந்துமாமலைக் குமரன் பிள்ளைத் தமிழெனுமிப் பிரபந்தம், கன்னிவிநாயகர்ப் பாராயணப் பாடல்களொடு தொடங்கப்பெறுகிறது.

திருநெல்வேலிச் சந்திப்பு உயர்திரு: அட்வகேட் **V. S. சங்கரசுப்பிரமணிய முதலியார் B. A., B. L.,** M. L. A. அவர்கள் அணிந்துரையோடுங்கூடியது

சேலம் எடப்பாடி ஞான இன்பவெளி நூலாசிரியரான உயர்திரு: **கோ. வை. சின்ன ஆறுமுக பக்தரவர்களின்** பாராட்டிற்கு உரியனவாகி, அவர்களின் சிறந்த மதிப்புரையும் பெற்றது.

மற்றும் பலதமிழ்ப் பேரறிஞர்களின் மதிப்புரையொடும் திகழ்கிறது.

ஆக்கியோர் : குமரனருட்கவி. வீரைக்கவிஞர். ஸ்ரீ கா. ந. நெல்லையப்பர்.
திருமலையகம்
வீரவநல்லூர். (போஸ்டு.)
திருநெல்வேலி ஜில்லா.

# மேலைக் கொழுந்துமாமலைக் கோயில்



திருநெல்வேலி ஜில்லாவில் புதுக்குடியென்னும் கிருமத்தின் தென்பாலாகச் சுமார் அரைகல் தொலைவில் இயற்கை வளங்களொடு காட்சி நல்குவனவாகும். திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள முருகன் தலங்களில் இத்தலம் மிகவும் பிரசித்திபெற்ற தலமெனினும் அஃதுமிகையாகாது. வானுறநிவந்த மலைச்சரிவில் தரை மட்டத்திற்குச் சுமார் 20-அடி உயரத்தே இக்கோயில் அமைக்கப்பெற்றிருக்கிறது. கோயிலின் கண் திருக்கோயில் கொண்டருளுங் குமரன் திருநாமம் பாலசுப்பிரமணியனுகும். கோயிலின் வடபாலாக இடும்பன்கோயில் காட்சி நல்குவதும் கண்டுகொள்க.

கோயிலின் முன்பாலாகச் சற்று தொலைவில் கிணறு, ஒன்று தென்படுகிறது. இக்கிணற்று நீரால்த்தான், இறைவனுக்குத் திருமஞ்சனமாட்டப் பெறுகிறது. மலை மேல், பாலூற்று, கன்னிமாரூற்று, என்னும் பல ஊற்றுக்களுமுளவாம். நோய்களைத் தீர்க்கும் பல வகை மூலிகை இனங்களும் இம்மலையின் கண் கிடைக்கப்பெறுகிறதாமென மருத்துவர்கள் கூறுவதும் உண்மைபாகும். கண்ணுக்கெட்டாத மலைச்சரிவுகளில் மூக்குறும் பெறித்த முனிபுங்கவர்களும் தவம் செய்துவருகிருர்களாமென்பதும் பிரசித்தம்.

சந்தப் பொதியத் தடவரை முனியாம்; அகத்தியர்க்கு, ஞானேபதேசம் செய்யும் திருவோலக்கமொடு, பாலசுப்பிரமணியப்பெருமான் காட்சி நல்குவதும் கண்டுகொள்க.



# கோயில் விசேட நாட்கள்.

மாதக் கார்த்திகை, மாதச் சுக்கிரவாரம், கார்த்திகைதீபம், கந்தர்சட்டி, விசாகம் இன்னன பிறவுமாம். தைமாதத்தே நிகழும் பூக்குழி வேற்காவடி வைபவமும், வைகாசி விசாகத்தே நிகழும் பூங்காவடி வைபவமும் கண்கொள்ளாக் காட்சியாகும். பிரார்த்தனைப் பாற்குடங்களும், காவடிகளும் மெய்யன்பர்களால் செலுத்தப் பெறுவதுண்டாம். குமரப் பெருமானின் இலை விபூதிப் பிரசாதத்தை உட்கொள்ளின் எவ்வித நோய்களும் நீங்குமென்பதும் கண் கண்ட உண்மையாகும். இம்மலையைக் கிரிவலம் செய்து வருவார்கள் மெய்யன்பர்கள். கிரிவலம் செய்வதால் இம்மை மறுமைப் பயன்கள்பெறுவரென்பதும் திண்ணம்.



சற்குரு ஞானனந்த சுவாமிகள் துணை.

சேலம் ஜில்லா. எடப்பாடி. ஞான இன்பவெளி நூலாசிரியர்,

# ஸ்ரீமான் பக்தசிரோமணி ஐயர்திரு. கோ.வை. சின்ன ஆறுமுகபக்தர் அவர்கள் மனமுவந்தளித்த,

# மதிப்புரை.

---

**பேரன்புடையீர் !**

தாங்கள் திருவருணலங்கொண்டு சிருட்டித்த குமரன் பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தத்தை முற்றும்படித்து மகிழ்ந்தேன். சொற்சுவை, பொருட்சுவை மலிந்துகிடக்கும் கவிநலங்கண்டு இன்புற்றேன். கற்றவர் நெஞ்சே கடவுள் இருப்பிடம்; என்ற ஆன்றோர்வாக்கும் மெய்ம்மைதானென்பதைத் தங்கள் திருவுளமும் தெற்றெனை விளக்கிக் காட்டிவிட்டது. தாங்கள் முருகன் திருவருணலம் பெற்றவரென்பதும் மிகையாகாது. அதன் காரணமாகவேதான், குமரன் பிள்ளைத்தமிழெனும் இப்பிரபந்தத்தைப்பாடி வெளியிடமுடிந்தது. தாங்கள் குமரன்பால் அளவுகடந்த அன்புடையவரென்பதைத் தாங்கள் பத்திவயத்துப் பாடிய இப்பிள்ளைத் தமிழொன்றேபோதிய சான்றாகும்.

பக்தி நனிசுவை சொட்டச் சொட்ட அமுதசுவையொழுகு பாடல்களமையப்பெற்ற இப்பிள்ளைத் தமிழ், கற்போர்க்கு விருந்தநல்குவதாகு மென்பதும் உண்மைதான். வெறும் புகழ்ச்சியுமல்ல. தங்கட்கு, மகாவித்துவான் என்ற பட்டமும் மனப்பூர்வமாக நல்குகிறேன் ஏற்றுக்கொள்வீர்களாக. எத்தனையோ? புலவர்களோடுபழகி, அளவளாவிப் புலமையை வியந்து, மகிழ்ந்திருக்கிறேனென்றாலும் தங்கள் புலமை விற்பனம் ஒருவித அபூர்வ சக்திவாய்ந்ததாக இருக்கிறதென்பதையும் உணர்ந்து மகிழ்ந்தேன்.

சொற்பொழிவாற்றும் பேராற்றல் பொருந்தி இருப்பதின் காரணமாகத் தாங்கள் போதகாசிரியராகவும், பல நூல்களைப்பாடி அச்சுவாகனமேற்றி வெளியிட்டு வருவதின் காரணமாக மகா வித்துவானாகவும் விளங்குகிறீர்கள்? கற்றூர் மாட்டுப் பேரன்பும் கல்லார்மாட்டு ஒருவிதத்தையையும், செல்வர்மாட்டு சிரியதடையும், முருக மெய்யன்பர்கள் மாட்டு ஒருவித கருணையும், எளியர் மாட்டு இரக்கமும் ஒருங்கே அமைப்பபெற்ற தங்கள் அருங் குணம் மிகவும் போற்றத்தக்கதே.

தான்பெற்ற இன்பம், இந்தத் தரணியும் பெற்று, மகிழ வேண்டித் தாங்கள் செய்துவரும் தமிழ்ப்பெருஞ்சேவை மென் மேலும் பயன்நல்குவதாக. விலைமதிக்க முடியாத மாணிக்கமாக விளங்கும் இப்பிள்ளைத் தமிழைக் குறைந்தவிலைக்கு வெளியிட்டு உதவியதற்கு இத்தமிழகம் என்றும் போற்றக்கடப்பாடுடையதே தாங்கள் நீடு வாழ்ந்து, உலகினுக்கு நல்வழிகாட்டி நிலவுமாறு எல்லாம் வல்ல இறைவனை மனமொழிமெய்யால் நினைந்துவாழ்த்தி வணங்குவோமாயினோம்.



# முருகதாசர் மதிப்புரை.



**அருணாலக் கவிஞரோ ?**

**அதியற்புதக் கவிஞரோ ?**

இவைகளில் எது, என்று திட்டமுறக் கூறமுடியாத ஒருவித வியப்பையும், திகைப்பையும் ஒருங்கே உண்டுபண்ணி விடுகிறார், நம் வீரைக்கவிஞர். அவர்தம் இயற்கை உள்ளத்தினின்று எழும் பாடல்கள், ஒருவித உத்வேகத்தையும், பக்திப்பரவசத்தையும், உண்டு பண்ணிவிடுகின்றன, வென்னில் அஃது மிகை யாகாது. சுருங்கக்கூறி, விளங்கவைக்கும், அவர்தம் பேராற்றல் — அருணாலம் அமையப்பெற்றதென்பதும் வெள்ளிடைமலை நிற்க.

குழந்தைவேலனின் பிள்ளைத் தமிழை—நம்வீரைக்கவிஞர் பாட நாம் கேட்டுமகிழவேண்டும். பக்திப்பரவச முற, அவர்கள் பாடும்போது, குழந்தை வேலனே, நம் மனக்கண் முன்தோற்றமளிப் பதான காட்சியில் நாம் ஈடுபடுகிறோம். என்னே! அவர் குமரப்பெருமானிடம் வைத்திருக்கும் பக்திமை! வாசகர்கள் உணர்வார்களாக அவர்கள் வெளியிடப்பெற்ற குமரன் பாராயணத் திரட்டை நாடோறும், பாராயணஞ்செய்துப்பயன்பெற்றுவருகிறேன். அவர்கள், திருவருணலங்கொண்டு பாடிய, இப்பிள்ளைத் தமிழைப் பாடிப், பாடிப், பரவசமுறுவோமாக. நம் வீரைக்கவிஞர் வாழ்க!

அவர்தம் முயற்சி வெற்றிபெறுக.

# அருளாளர் - வாக்கு.

1 கவிபாடிப் பெருமைசெயக் கம்பனிலை
யெனுஞ்சொல்லின் கவலை தீர்ப்பான்
புவிபாடும் புகழுடையான் புலவர்களி
லேறென்னும் பெயரு மேற்பான்
அவியுணவாம் அருந்தமிழி லழகுயரு
காவியங்க ளருள வல்லான்
கவிபொழியு முகிலன்னான் கண்ணியனும்
புகழ்வீரைக் கவிஞன் மன்னே.

2 முருகன்பா லன்புடையான் முகமனுயர்
இன்சொல்லான் விளங்கு மேன்மைத்
திருவருளும் பெற்றுயரு சிறப்புடையான்
தேசியத் தொண்ட னவான்
வருவிருந்தும் உபசரிக்கும் வாழ்வுடையான்
பேறுடையான் மகிமை மிக்கான்
குருவின்றி யருணலத்தாற் கவிபொழியும்
நெல்லையப்பக் கோமான் மன்னே.

3 குளிர்தவழு வளமேலைக் கொழுந்துமலைத்
திருக்கோயிற் குமரன் பாலே
வழிவழியே திருத்தொண்டாம் வழிபாட்டி
லுளந்திளைக்கும் வாழ்க்கை மேலான்
கழிமகிழக் காவியமும் பெருவிருந்தா
அருளவலக் கலையின் மிக்கான்
அளிமுரலும் பூந்தாரான் கவிநெல்லை
யப்பனெனும் அறிஞன் மன்னே.

4 விள்ளரிய புகழ்மேலைக் கொழுந்துமலை
வேலவர்க்கே மெய்ம்மை யன்பு
தெள்ளரிய முறைமையினிற் றிகழ்பிள்ளைத்
தமிழமுதந் திரட்டா நின்றான்
கொள்ளரிய அவன்புலமை யொருவாறு
கூறிடினும் குவல யத்தே
அள்ளரிய அருணலத்திற் கென்னுவமை
யாக்குதும்யாம் அறிஞ ரேறே.

# கண்கண்ட தெய்வம்! குமரனே!!

விரைக்கவிஞர் கா. ந நெல்லையப்பர்.

---

1 கண்கண்ட தெய்வ மென்பேன்
கருத்தினிற் றெளிவு கொள்வேன்
பண்கொண்ட தமிழிற் பாடிப்
பரவசத் தார்ப்பி னிற்பேன்
கொண்கொண்ட குளிரார் மேலைக்
கொழுந்துமா மலைக்கண் கோயில்த்
திண்கொண்ட குழந்தைத் தெய்வம்
துணையென்றும் கொண்டேன் வாழ்வே.

2 குழந்தையே! அழகுத் தெய்வம்
குமரனுங் காட்சித் தெய்வம்
குழந்தையே! இன்பம் நல்கிக்
குதுகல மூட்டுந் தெய்வம்
குழந்தையே! வடிவா மேலைக்
கொழுந்துமா மலைக்கண் கோயிற்
குழந்தையே! தெய்வ மாகக்
கொண்டுநாம் போற்று வோமே.



# ஞான இன்பவெளி நூல்

கிடைக்குமிடம்:

கோ. வை. சி. ஜோதிப் - பிரகாசம்

அன்பு நிலையம்

எடப்பாடி. (P. O.)

சேலம் ஜில்லா.

விலை ரூபாய் ஒன்று

(ஆசிரியர்)

கோ. வை. சின்ன ஆறுமுக பக்தர் அவர்கள் இயற்றியது.



## வீரைக்கவிஞர் - பாடியது.

பேரோ ? சின்ன ஆறுமுகம்
புகழோ ? பெரிய அருமைநலம்
ஊரோ ? சேலம் எடப்பாடி
உளமோ? ஆத்ம ஞானவழி
ஏறேன் பாலும் அன்புவெளி
எழுதா ஞான இன்பவெளிச்
சீரோ? மேலும் தொகுத்துரைக்கச்
சிறியே னாலும் ஆவதோ ?

# இருவர் சந்திப்பு.

## பாரதத்தொண்டனும், விரைக்கவிஞரும்

---

விரைக்கவிஞர் : வாருங்கள். இப்படி உட்காருங்கள். தாங்கள் யார்? தெரியவில்லையே!

பாரதத்தொண்டன்: என்னைத் தெரியவில்லையா? குற்றாலத்தில் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தது ஞாபகமில்லையா?

விரைக்கவிஞர் : ஆமாம். இப்போதுதான் ஞாபகம் வருகிறது. மறந்துவிட்டதாக நினைக்கக் கூடாது.

பாரதத்தொண்டன்: தாங்கள் என்னை மறந்திருப்பீர்களென்று நினைக்கவில்லை. தாங்கள் தான் நண்பர்களிடம் பேரன்பு கொண்டவர்களாயிற்றே! என்னையா மறந்துவிடுவீர்கள்.

விரைக்கவிஞர் : தங்களை நான் மறக்கமுடியாது. தங்களை மறந்தாலும், தங்கள் பேச்சுத்திறனையும், தாங்கள் ரசிக்கும் கவிகளின் ஒப்பற்ற தன்மையையும் நான் ஒருக்காலும் மறக்க முடியாததாகும்.

பாரதத்தொண்டன்: தங்களைக் குறித்துப் பல நண்பர்கள் பேசிப் புகழ நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் நான் முதன் முதலில் தங்களைச் சந்தித்தது குற்றாலத்திலல்லவா?

விரைக்கவிஞர் : ஆமாம். ஆமாம். அதுதான் முதற்றடவை. மறுதடவைத் தங்களைச் சந்திக்கவேண்டுமென்று எண்ணமுண்டு. ஆனால் தாங்களாகவே இப்போது நேரில் சந்தித்துவிட்டீர்களே.

பாரதத்தொண்டன்: தங்களைக்குறித்தும், தங்கள் கட்டுரைகளைக் குறித்தும், தங்கள் வெளியீடுகளைக் குறித்தும், நான் பிரமாதமாகத் தங்கள் நேரிற் புகழ்வதாக நினைக்கக்கூடாது. உண்மையில் கவிசெய்யும் பேராற்றல் தங்களிடம் இயற்கையாகவே அமைந்திருக்கிறது. வேறு எவர்க்கும் வாய்த்தல் அரிது.

வீரைக்கவிஞர் : இருக்கலாம். நானும் என் புலமையைக் குறித்து வியப்பதுண்டு. நானாக கவிபாட வேண்டுமென்று விரும்பவில்லை ஏதோ ஒருவித சக்திதான் என்னைப் பாடும்படித் தூண்டுகிறது. அதன் பயனாகச் சுமார் எண்பத்திநான்கு பிரபந்தங்கள்வரை பாடி விட்டேன். குறிப்பாக பத்திரிகை ஆசிரியர்கள் எனக்கு ஊக்கத்தை அளித்தார்கள். தங்கள் தங்கள் பத்திரிகைகளில் எனது கட்டுரைகளைப் பிரசுரித்துக் கௌரவப்படுத்தினார்கள். அவர்கள் ஊக்கமே என்னை மேலுமேலும் இத்தமிழ்ப் பெருந்தொண்டில் தளராத முயற்சியை உண்டுபண்ணிவருகிறது

பாரதத்தொண்டன்: எண்பத்திநான்கு பிரபந்தங்களா? பாடுவது சிரமந்தான். வித்வான் பட்டங்கள் பலர் பெற்றிருக்கலாம். ஆனால் கவி எழுதுவது என்றால் அவர்கட்கு அதுவேம்புதான்.

வீரைக்கவிஞர் : எல்லாம் அவரவர்கள் புலமையைப் பொறுத்தே அமைந்திருக்கும். எனக்குக் கவிகளியற்றுவதில் அவ்வளவு சிரமமில்லை.

பாரதத்தொண்டன்: அதெல்லாம் கடவுள் உங்களுக்குக் கொடுத்த பாக்கியந்தான். தங்களைப்போல் விரைவில் அவ்வளவு நுட்பமாகவும், பொருளமைதி சொல்லமைதியொடு யாருமே பாடமுடியாதுதான். தங்கள்போன்ற ஒருசிலர்க்கே அவ்விதம் அமைதல்கூடும்.

வீரைக்கவிஞர் : என் நண்பர்களெல்லாம் அப்படித்தான் கூறுகிறார்கள் எனக்கும் வியப்பாகத் தானிருக்கிறது.

பாரதத்தொண்டன்: தாங்கள் இயற்றிய கோ. வை. சின்ன ஆறுமுகபக்தர் அவர்களின் வாழ்க்கை வரலாறு புத்தகம் பார்த்தேன். எனக்கு மிகுந்த மகிழ்வைத்தந்தது. மேலைக் கொழுந்துமாமலைக் குமரன் பாராயணத் திரட்டை நீங்களே எனக்கு அனுப்பியிருந் தீர்களே! — அதனைத் தினந்தோறும் பாரா யணஞ்செய்துதான் வருகிறேன். எனக்கு முருகனிடம் பக்தி இயற்கையிலே உண்டாம்.

வீரைக்கவிஞர் : நூல்களைக் குறித்து ஏதேனும் அபிப் பிராயம் தெரிவியுங்கள்.

பாரதத்தொண்டன்: எல்லாம் நல்ல அபிப்பிராயந்தான். பாடல் களெல்லாம் அழகாக இருக்கின்றன. வேறு என்னவென்று சொல்லுவது! தற் பொழுது, என்ன நூல் வெளிவருகிறதோ?

வீரைக்கவிஞர் : மேலைக்கொழுந்து மாமலைக் குமரன் பிள்ளைத் தமிழை வெளியிட உத்தேசம். அதற்கான முயற்சி நடந்துவருகிறது.

பாரதத்தொண்டன்: நல்லது ஏதேனும் தேசிய சம்பந்தமாக நூலொன்று தாங்கள் வெளியிடக்கூடாதா?

வீரைக்கவிஞர்: எனக்கும் அது விஷயமாக எண்ணமுண்டு. மகாத்மாவின் சரிதம் எழுதப்பெற்று வருகிறது. கூடிய விரைவில் வெளியிட வேண்டிவரும். எல்லாம் இறைவன்செயல்.

பாரதத்தொண்டன்: நல்லது அவ்விதமே வெளியிடுங்கள். பெரு மக்கள் பெரிதும் விரும்புவார்கள். தங்கள் வெளியீடுகளை வரவேற்கிறேன். நேரமாயிற்று. ஊர்போகவேண்டும். பாபநாசம் சென்று திரும்பிவருகிறேன். சமயம் நேர்ந்தால் தங்களைச் சந்திக்கிறேன்.

விரைக்கவிஞர்: நல்லது போய்வாருங்கள். ஞாபகமிருக்கட்டும். வணக்கம்.

பாரதத்தொண்டன்: தாங்கள் நில்லுங்கள் — நான் விடை பெற்றுக்கொள்கிறேன்.



## விரைக்கவிஞர் நன்றியும் வாழ்த்தும்.

இப்பிரபந்தத்தைப் பாடும்படி, என்னைத்தூண்டியும், வெளியிடும்படி, வேண்டியும், பிள்ளைத்தமிழ்ப் பாடலைக் குமரப் பெருமான் திருவோலக்கமன்றத்தே என்னோடு உடனிருந்து அரங்கேற்றம் செய்வித்தவரும் எனக்கு ஊக்கத்தையும், பேராதரவையும், தந்துதவும், பிரமுகரும், நூல் & ஜவுளி வர்த்தகரும், விநாயகப்பெருமான்பாலும், குமரப்பெருமான்பாலும் நீங்காத பேரன்புவழிபாடுடையவரும், வீரவநல்லூர்ச் செங்குந்தர் மரபுத்திலகருமான உயர்திருவாளர்: ஸ்ரீ ந ஆ. சிதம்பரநாத முதலியார் அவர்கட்கு எனது நன்றியும் பேரன்பும் உரித்தாகுக.

திருவாளர் :

## ந. ஆ. சிதம்பரநாத முதலியார் அவர்கட்கு

## வாழ்த்து.

### நேரிசையாசிரியப்பா.

செந்நெலங் கழனி திகழ்வள வீரை
மன்னுசெங் குந்தர் மரபினில் வந்தார்
ஆழ்வார் முதலியார் அருந்தவச் செல்வர்
நீளுயர் வணிகம் நிகழ்த்தருஞ் செயலர்
சீரார் மேன்மைச் சிதம்பர நாதப்
பேரா ரன்பர்; பெருந்தகை யாளர்
வேழமா முகத்து விநாயகர் பாலும்
ஆளுயர் முருக அமலனார் பாலும்
அன்புயர் பத்திமை யரும்பிடும் பெரியர்
இன்புய ரின்சொல் இயம்பிடு மெய்யர்
வர்த்தக நுட்ப மாண்பெலா மறிந்த
விற்பனைத் தன்மை விளங்குப ரறிஞர்
என்பா லன்பும் இயைந்திடும் அன்னார்க்
கின்னூல் ஏற்புடைத் தாக
மன்பெரு வையம் வழங்குவன் வாழ்த்தே.



# ஞான இன்பவெளி நூலிற்கு

## வித்துவான், கா. ந. நெல்லையப்பர் அவர்கள்

## மனமுவந்து நல்கும்

# அ ணி ந் து ரை.

---

ஞான இன்பவெளியெனும், ஒப்பற்ற அணிகலனைக் கவின் பெறயாத்துத் தமிழ்ப் பேரறிஞர்கள் அணிந்து, அழகுகாணும் ஆபரணமாக, ஆக்கித்தந்த பெரியாரே, உயர்திருவாளர்: கோ. வை. சின்ன ஆறுமுக பக்தர் அவர்களாவர்.

சித்தாந்த, வேதாந்தங்களில், புதைபொருளாகக்கிடந்த திரள்மணிகளைத் தமது அகக்கண்கொண்டு பொறுக்கியெடுத்துத் தமதுபண்பட்ட அநுபூதிஉள்ளமாகிய தேய்ப்புக்கல்லிற், சாணை பிடித்து, மாசுமருபோக்கி, இயற்கை ஒளிபிறங்கும் மணிகளாக்கி, அழகுறக் கோவைபடுத்தியாத்த அருங்கலனான "ஞானவின்ப வெளி" யெனும் ஆபரணத்தையாவரே! மதிப்பிடவல்லார் !!

முத்து, மாமணி, மாணிக்கவைரத்த, பவளத்த, முழுச்சோதி யென்றுபாடியருளிய மணிவாசகர்தம், மணிவாசகமேபோன்று, ஞான இன்பவெளி நூலின் வாசகம் காட்சி நல்குகிறதெனினும், அஃது மிகையாகாது. அதுமட்டுமல்ல. யாமார், எமதார், பாசமார்? என்று, எழும் கேள்விக்குத் தகுந்த விடையிறுக்கும், வானொலியாகவும், ஞான இன்பவெளியெனும் நூல் ஒலிபிறங்கச் செய்கிறது. அதுமட்டுமல்ல.

அஞ்ஞானத்தால், பாசத்தளைப்பட்டு, முன்செய் நல்வினைப் பயனால் ஒரு சிறிது உணர்வுஉந்த, இறைவனைக் காண்பது, என் ஞான்று, எனஏங்கிக் குமுறும் உள்ளமுடையார்க்கு, உள்ளக் கவறல் ஒழிமின், யாம்காட்டுதும் எம்வழிபின்பற்றுமின்கள், என, வழிகாட்டி, ஒப்பற்ற ஞான இன்பவெளிக்கு நடத்திச்செல்லும், அரும்பெருந்துணைவனாகவும் மேற்கூறிய நூல் ஆதாரவளிக்கிறது. இதுமட்டுமல்ல.

அரம்போலும், கூர்மையாராக, ஆக்கி, அறிவொளியால், ஆத்மஞானம் விளைவித்து, நீக்கமற நிற்கும், பரம்பொருளில், இரண்டறக் கலப்பித்து, நீயும், யானும், பிரிவில ஒன்றேயெனும், சேர்மையும் நிலைபெறச்செய்து, ஒருவித பேரின்பநிலைக்கு ஆளாக்கிவிடுகிறதாம் "ஞான இன்பவெளி" சுருங்கக்கூறின், மேற்கூறிய நூல், ஐயப்பாடற, அகத்தநுணர்வானைத் தெய்வத் தோடுவைக்கும், சிறப்புடையதாகவும் போராதரவுபுரிகிறது. என்னே! ஞான இன்பவெளி நூலின் அருமை பெருமை! புலமைகொண்டு அளப்பது மெங்ஙன்: கள்ளப்புலனுற் கட்டுரைக்கமுடியாதென்பதும் உண்மைதான். விரிவஞ்சிவிடுக்கிறேன். இத்தகைய சிறந்த ஞான இன்பவெளி நூல், பரவெளியுலகில் பயன்பெறுமாறு, எல்லாம் வல்ல இறைவனை மனமொழிமெய்யால் வாழ்த்துகிறேன். ஞான இன்பவெளி நூலினைத் திருவுளமகிழ வெளியிட்ட பெரியார் கோ.வை. சின்ன ஆறுமுகபக்தர் அவர்கள் சேவையைப் பெரிதும் பாராட்டுகிறேன். நூலாசிரியர் புலமை என்றும் நிலைத்தும் பயன்பெறுவதாக. வாழ்க அருணலம்.

கண்காணுங் கவிஞர்! வீரைக்கவிஞரே!!

இன்னிசையாளர்

## "ந. சுப்பையா" திருநெல்வேலி.

எழுதிய மதிப்புரை.

எத்தனையோ? புலவர்ப் பெருமக்களை நாம், கண்ணாரக் கண்டுகொண்டுதானிருக்கிறோம். அவர்கள் இயற்றிய பாடல்களைப் பாடித்தான் மகிழுகிறோமென்றாலும், அவர்கள் பாடல்கள் மனதிற்கு இன்பம் விளைவிப்பனவாகஇல்லை. நம் வீரைக்கவிஞரின் பாடல்களோ, நாம் பாடுவதற்குத் தொடங்குமுன் நம்மைப் பாடும்படித் தூண்டிவிடுவதோடு, உள்ளத்திற்கும் ஒருவகை இன்பம் பயப்பதென்பதும் உண்மைதான்.

தேவாரம், திருவாசகம், திருப்புகழ் இவைகளிலுள்ள பாடல்களை நான் இன்னிசையோடு, பொதுமன்றங்களில் பாடி வருபவன். திருவருணலமுடையார்தம், பாடல்களைப் பொது மன்றங்களில் நான் பாடிப்பாடி மகிழ்வுகொள்வதுண்டு. நம் வீரைக்கவிஞர், பாடல்களையும் பொதுமன்றங்களில் மேற்கூறிய தேவாரம் திருவாசகம் திருப்புகழோடு பாடித்தான் வருகிறேன். மேற்கூறிய பாடல்களோடு, நம் வீரைக்கவிஞர் பாடல்களை ஒப்புநோக்கச் சமத்துவம் பொருந்தியதாகவே தென்படுகின்றன. நம் வீரைக்கவிஞர் வாழ்க. அவர்கள் பாடல்களின் இசைநலம், எங்கும் பரவி இன்பம் பயப்பனவாகுக. வாழ்க செந்தமிழ்!



# பூக்குழி வேற்காவடி :: வைபவக் காட்சி!

பிரதிவருடமும், தைமாதத்தே நிகழும், பூக்குழி வேற்காவடி வைபவம் கண்கொள்ளாக்காட்சியாகும். **குமரப் பெருமான்** உண்ணின்றுணர்த்த, விரதம்நோற்றுத், திருக்காப்புக்கட்டித், துய்யவெண்ணீறு துதைந்தமேனியராக் கண்கவர் வனப்பிற் காட்சிநல்கும், காவிஉடை, உடீஇய, உடையினரா, வாய்ப்பூட் டோடும், கூர்மையின் வடித்தெடுத்த வெண்பொன் வேல்கள் தைக்கப்பெற்ற மேனியராச், சந்தமளீஇய தடந்தோளிற் காவடி தாங்க, வீதிவலம் வருங்காட்சி அதியற்புதமாகும். பம்பை தாளங்கள் பறைமுரசமார்ப்பவும், வெண்சங்கம், வீறிட்டலறவும் காளகம், பல்லியம், கலித்தொலிவிள்ளவும், எக்காளம் எதிரிட் டழைக்கவும் மெய்யன்பர்கள் **முருகா! முருகா!!** வென்று, பக்திப்பரவசமுற உள்நாதத்தொலியாற் செவிடுபடுத்தவும், மிகவும் ஆரவாரமோடும் ஆடல்பாடல்களோடும் மேலைமலைக் கோயிலின் திருமுன்னர், மந்திரமரபுளி, ஓமமிட்டுவளர்த்த, ஓங் கெரிகொள்ளும் பூக்குழியை மும்முறை வலம்வந்து பாய்ந்து செல்லும் காவடி வைபவம் கணிக்குந்தரத்ததோ ? மேற்கூறிய பூக்குழி வேற்காவடி செலுத்தும், மெய்யன்பர் **ச ராமலிங்கம்** அவர்களாவர். மலைக்கோயிற் **குமரன்பால்** இடையறுயன்புடை யராக நித்தியவழிபாடு பூசனைபுரியும், பணிவிடையாளருமாவர். மேற்கூறிய காவடி இன்னவரால் செலுத்தப்பெற்றுவருவதாகும், பிரதிவருடமும், வருடம் ஒன்றுக்கு நூற்றெட்டு வேல்கள் கூடு முறையில் தைக்கப்பெற்று, நான்காவது வருடக்காவடியில் ஐநூற்றிநாற்பது, அரும்பெரும் வேல்கள் மேனியில்த் தைக்கப் பெற்றுச் செலுத்தப்பெற்றதாகுமென்பதும் மெய்யன்பர்கள், அறிந் ததே. சுற்றுவட்டாரங்களிலுள்ள, பேரன்பர்களின் பேருதவியால் மேற்கூறிய பூக்குழி வேற்காவடி செலுத்தப்பெற்றுவருகிறது.

**விரைக்கவிஞர்.**

# வேண்டுகோள்.

மேற்கூறிய மேலைமலைக் குமரப் பெருமானுக்கு, நித்திய வழிபாட்டிற்கென்று, போதுமான சொத்துக்கள்கிடையா. வழிபடும் மெய்யன்பர்களின் பேராதரவால்த்தான் இதுகாறும் நடைபெற்றுவருகின்றன. செல்வந்தராக உள்ளவர்களும், முருக மெய்யன்பர்களும், மனமுவந்து, தாராளமான மனப்பான்மையொடு பொருளுதவிபுரிந்து, குமரப்பெருமான், கிருபாகர நோக்கிற்கும் பாத்திரமாகும் வண்ணம் கேட்டுக்கொள்ளப்படுகிறது,



முருகன் பணிவிடையாளர்:
ச. ராமலிங்கம்,
வீரவநல்லூர்.

திருநெல்வேலி ஜங்ஷன்

உயர்திரு :

**V. S. சங்கரசுப்பிரமணிய முதலியார்,**

**அவர்கள்** B. A., B. L., M. L. A.,

அட்வகேட்

அங்கத்தினர் செனேட், மதராஸ்.

யுனிவர்சிடி.

*அணிந்துரை.*

விரைக்கவிஞர், கா. ந. நெல்லையப்பர் அவர்களியற்றிய விரை நான்மணிமாலை காரைக் காளத்தி விநாயகர் கிள்ளை விடுதூது. முதலான நூல்களைப் பார்வையிட்டேன். இலக்கணங்கற்று வழுவில்லாத பாக்களெழுதுவோர் அருகி வருமிக்காலில், இப்புலவரின் பாடல்களைப் பாடுவோரும், கேட்போரும் இப்புலவரைப் பாவுலக மறுமலர்ச்சியாளராகக் கருதுவர்.

மேலக் கொழுந்துமாமலைக் கன்னி விநாயகர்ப் பிரதிட்டைக் கும்பாபிடேக தினத்தன்று (30-4-1950) கூடியிருந்த, பக்த சிரோன்மணிகளின் கூட்டத்தில், புலவரவர்களியற்றிய, குமரன் பிள்ளைத்தமிழெனும், காவியம் புலவரால் அரங்கேற்றப்பட்டது.

சொற்சுவை, பொருட்சுவை, ததும்பும், பிள்ளைத் தமிழ்ப் பாடல்களை, இனியகானத்தோடு, புலவர் தெய்வ மணங்கமழப் பாடியதைக்கேட்ட யாவரும், பரவசமுற்றிருந்தனர். புலவர் வாழ்க!

# மேலைக்கொழுந்து மாமலைக் குமரன் பிள்ளைத் தமிழ்.



மேலைக் கொழுந்து மாமலைக் கன்னி விநாயகர்

### வணக்கம்.

பொன்னி னியலும் பொருள்வகையும்
பெருவாழ் வோங்கு பேரருளும்
மன்னித் திகழ வரம்நல்கும்
மாண்பார் மேலைக் கொழுந்துமலைக்
கன்னி மூலை விநாயகர்தங்
கழற்பூங் கமலப் போதிரண்டும்
சென்னித் தலம்வைத் தேத்துவார்
தொழுவார் சிறப்பும் பெறுவாரே.

### வெண்பா.

வென்றிதருங் கன்னி விநாயகர்தம் பூங்கழல்கள்
சென்றுதொழு வார்க்கின்பம் சேருமே — நன்றுதரு
செல்வங்கை கூடும்; திருவருளும் சித்திக்கும்
எல்லையிலா வாழ்வி னினிது.

"வீரைக்கவிஞர்."



## பரமசிவன் துதி.

கங்கைச் சடையான் கதிர்வெண் ணிலவுமிழும்
திங்கட் பிறையான்றன் சேவடியே — பொங்குபே
ரன்பிற் றுதிப்பா ரருள்பெறுவார்; வாழ்வுயர
இன்புற் றிருப்பா ரினிது.

---



## குமரன் துதி.

முருகா குகாவென்று மும்முறையும் வாய்விட்
டுருகா நெகிழ்வார்க் குதவ — வருகுவனே
மேலைக் கொழுந்துமலை மேவுறும் வேலனே
வேலையெனக் கொண்டு விரைந்து.

---

1 ஆளுநற் றெய்வம் அருளுநற் றெய்வம்
அல்லலும் அகற்றுநற் றெய்வம்
வாழ்வுயர் செல்வம் வழங்கிடுந் தெய்வம்
வையகம் யாதென வினவின்?
கோளிலா மேலைக் கொழுந்துமா மலையிற்
கோயிலாக் கொண்டெழுந் தருளும்
வேழமா முகத்து விளங்குயர் கன்னி
விநாயகத் தெய்வமாம் மன்னே.

விள்ளருந் தெய்வம் விரும்பருந் தெய்வம்
வேண்டுவார்க் கருள்செயுந் தெய்வம்
2 தெள்ளுபே ரறிவிற் றிரளுருற் றெய்வம்
தித்திக்கும் அமுதாற் றெய்வம்
கொள்ளரும் மேலைக் கொழுந்துமா மலையிற்
கோயிலாக் கொண்டெழுங் கன்னிப்
பிள்ளையார் தெய்வப் பூங்கழற் போற்றும்
புண்ணியம் பெற்றனம் மன்னே.

---

3 கருணை பூத்த கடைக்கண்ணும்
கமலம் பூத்த கழலிணையும்
அருமை பூத்த புழைக்கையும்
அமையா நின்ற ஐங்கரத்தன்
பெருமை மேலைக் கொழுந்துமலைப்
பெம்மான் கன்னி விநாயகர்க்கே
அருளு பூத்தார்க் கென்மனமும்
அன்பு பூக்கும் திண்ணமே.

4 விண்ணார் மேலைக் கொழுந்துமலை
வேலா யுதனார்த் தென்பாலாத்
திண்ணார் மாடத் திருக்கோயில்
திகழும் கன்னி விநாயகர்தம்
தண்ணார் கமலத் திருவடிகள்
தளிரும் அன்பிற் போற்றுவார்
பண்ணாற் பாடற் பரவுவார்
பயனார் வாழ்வும் பெறுவாரே.

5 கண்ணாற் காண்மின்! கைதொழுமின்!
காதல் அன்பின் வழிபடுமின்!
எண்ணு தெண்ணரி இருதயமாம்
எழிற்பொற் கமலத் திருத்துமின்
கொண்டு மேலைக் கொழுந்துமலைக்
கோயிற் கன்னி விநாயகரைப்
பண்ணாற் பாடிப் பரவுமின்!
பத்தி வயத்துப் பரவசத்தே.

6 உருகா நெகிழா ஊனமுடையா
உளனைக் குருகா உணர்வுநலம்
பெருகார் வத்துப் பரவசத்தே
போற்று நிற்பீர்! பன்முறையே
மருவார் மேலைக் கொழுந்துமலை
மாண்பார் கன்னி விநாயகரும்
தருவார் ஞான வாழ்வுநலம்
தழையா நிற்கப் பெரும்பேறே.

# மேலைக் கொழுந்து மாமலைக் குமரன் பிள்ளைத் தமிழ்.

## காப்புப் பருவம்.

### சிவபெருமான்

1 அண்டபகி ரண்டமுங் தொண்டர்திரு வுள்ளமும்
அகலாப் பரந்துநின்றே
அற்புதக் கூத்தொளிரு விற்பனத் தேர்தலே!
ஆருயிர்க் கோர்மருந்தே!

துண்டமதிச் செஞ்சடை கொண்டநதிக் கங்கையுஞ்
சேரத் திரண்டவௌமே!
சித்தர் நினைக்கமயல் பித்தர் தெளிக்குகுண
தேவாதி தேவமுதலே!

விண்டமறை யாகமம் கண்டுதொட ராதநல்
விஞ்ஞான ஞானவடிவே!
மேலான மங்கையொரு பாலான மோகனே
விண்ணவர்க் கருள்தெய்வமே!

விண்டடவு குன்றமீார் மேலைக் கொழுந்துமலை
வேலாயு தக்கடவுளை
வேண்டிப் புரந்தினிது காத்தருள் செய்கவே
வேதங் கடந்தசிவமே!



## விட்டுறை

2 கத்தூர் தாங்கக் கடலிடையே
கண்கள் துயில நெடும்பள்ளி
காணும் பெருமான் கார்மேகங்
கவினு பெரிய திருமேனி
நத்தும் பெருமான் பாதலமும்
நடந்தும் என உருவினொடு
நற்சே வடிகள் காணாது
நலிவுற் றயர்ந்த பெருமானே
மத்தின் தயிரிற் கவாவுற்று
வாரி வெண்ணெய் அளைந்துண்ண
மாதர் ஆயர் குலமடவார்
மருட்டும் அடிகள் பொறுத்தவனே !
கொத்தின் கனிகள் கொம்பர் தருங்
குன்றார் மேலைக் கொழுந்துமலைக்
குமரன் அழகன் குருபரனாங்
கோமான் றன்னைக் காத்தருளே.

## மலை விநாயகர்

3 தேனார் கானத் தினைப்புனமே
சிறையார் காவற் சிறுமகளிர்
சொச்சோ வென்றே கிளியோப்பும்
செயலே கொண்ட சேயிழையாம்
மானார் வள்ளி மனம்பதைத்து
மருள யானை வடிவெடுத்து
வடிவே லவர்க்கு மணஞ்செய்து
மகிழ்ந்து கண்ட வாரணமே !
கானார் குறடுங் குன்றுவெளி
கடிய தடமும் பொழிற்சுனையுங்
கால்க ணோவ அயர்ந்துவழி
கடந்து சென்ற காளையையே !
கூனார் மேலைக் கொழுந்துமலைக்
குமரன் றனையே ! காக்கவே
கோட்டு நதியாற் பாரதமுங்
குதியா நின்ற பெருமானே.

## உமையாள்

அமையா நின்ற பேருலகை
ஆளா நின்றே ஆருயிர்க்கும்
அருளா நின்றே நாலெட்டா
ஆன அறங்கள் புரிந்துதவும்
இமையார் மானே! மடப்பிடியே!
எழுதா நின்ற ஓவியமே!
எடுக்க எடுக்கக் குறையாத
இயல்பி னிற்குங் களஞ்சியமே!
சமையா நின்ற பருவத்தும்
தானு மீன்ற மயிலினமே!
சங்க மணியும் குழைதோடும்
தானு மணிந்த பெண்ணுமையே!
குமையா நின்ற புகழ்மேலைக்
கொழுந்தா மலைவாழ் குமரனையே
குழந்தை வடிவா யிலங்குகுணக்
கோமான் றனையே காத்தருளே.

## கார்த்திகைப் பெண்கள்

5 கரந்தொட்டுத் தாலாட்டுங் கார்த்திகை மங்கையீர்!
கண்ணையில் வேல்தாங்குவீர்!
காதலுயர் மைந்தனைக் கந்தனைச் சேந்தனைக்
கடம்பமரு பூந்தாரனைச்
சிரந்தொட்டு வணங்குவீர் சேவடிகள் போற்றுவீர்!
சிந்தைமற வாதுதொழுவீர்
தேவாதி தேவனும் சிவனையும் வேண்டியே
சிறுவனைக் காக்கவென்றே.
வரந்தொட்டுத் தவந்தொட்டு மனந்தொட்ட வேலனை
வளர்கவென் மேலுமென்றே
வாயார வாழ்த்தொலி யோயா முழக்குவீர்
மனதார எந்நாளுமே
குறந்தொட்ட குன்றமார் மேலைக் கொழுந்துமலைக்
கோயிலுங் கொண்டகுகனைக்
குமரனை யழகனைக் குழகனை மயிலேறு
குழந்தையைக் காக்கவென்றே.

# செங்கீரைப் பருவம்.

1 ஏர்கொண்ட செம்மைபஞ் சூட்டியநின் சீறடி
இருநிலந் தோய்ந்திடாமல்
இலகுசெந் தாமரைக் கிணைசெய்முக மண்டலத்
தெழினல மழிந்திடாமல்.

கார்கொண்ட கூந்தலஞ் சடைமுடியின் மோலியுங்
கலைந்துந் திரிந்திடாமல்
களபமணி மார்பலங் காரமுயர் மேனியின்
கவினு மழிந்திடாமல்.

தார்கொண்ட சண்பகந் தான்சேறுகு மாலையும்
தன்மணங் குன்றிடாமல்
தண்டையங் கால்களுங் கடகமணிக் கைகளும்
தவழலா லூராய்ந்திடாமல்.

சீர்கொண்ட மேலைக் கொழுந்துமலைத் தேவனே
செங்கீரை யாடியருளே
தேவர்துயர் தீரவரு காவலா சேவலா
செங்கீரை யாடியருளே.

2 துங்கமலி திருநுதற் றிலக மழிந்திடாத்
துவர்வாயி னமுதமொழுகாச்
சிலம்பணியு மென்கணைக் காலுந் தழும்புறாத்
தோளுமெவ் தூசுபடியாத்.

தங்குமுடி மோலிமணி தானு முதிர்ந்திடாத்
தங்கவுரை ஞானுமெகிழாச்
சதங்கைமணிக் கோவையின் சன்னந் தெறித்திடாச்
சதுர்மறைகள் கண்டஞ்சிடாப்.

பொங்கருட் கட்கடைக் கண்கருணை வெள்ளமும்
பூரித் தெழுந்துசிதையாப்
பொன்மேனி தன்னழகு மின்னலெதிர் பாய்ந்திடாப்
புவனம் அதிர்ந்தஞ்சிடாத்.

தேங்குலவு மேலைக் கொழுந்துமலைத் தேவனே
செங்கீரை யாடியருளே
தேவர்துயர் தீரவரு காவலா சேவலா
செங்கீரை யாடியருளே.

3 சூரின் துயரம் ஆற்ருது
தேவர் சிவனர் கழலிறைஞ்சித்
தேவே! துயரந் தீர்த்தருளச்
சேயொன் றமைய வேண்டுமென.

ஏறார் அமலன் மனமிரங்கி
இமைக்கே தருது மெனஅருளி
இணையு றாதற்க ணறுபொறிகள்
இயங்கப் பின்ன ரொன்ருகிச்.

சீரா ருலக மெங்கணுமே
சேரத் திரளக் கண்டமரர்
திகைத்து பதைத்து வெருவிடவே.
தேவன் வாயுக் கடவுளரைப்.

பேரார் மேன்மைச் சரவணமாம்
பொய்கை விடுக்க ஆணையிடப்
பிள்ளை யாகி யறுமுகமும்
பொருந்த வந்த பெருமானே.

கூரார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா செங்கோ செங்கீரை
கூறும் வடிவேற் படையுடைய
குழந்தாய் செங்கோ செங்கீரை.

வார்தரு மேன்மை மயில்வரு பாகா
வரதா! செங்கோ செங்கீரை
மணிமுடி மௌலி வளமுய ரழகா
மகிபா! செங்கோ செங்கீரை
கார்தரு வள்ளற் கருணையஞ் செல்வா
கந்தா! செங்கோ செங்கீரை
கடலமு தனைய சொலுமுதிர் பவளக்
கனிவே செங்கோ செங்கீரை
பேர்புக ழறுமா முகமுயர் பிள்ளைப்
பெருமா செங்கோ செங்கீரை
புதுமண மலராம் செண்பக மருவும்
புனிதா செங்கோ செங்கீரை
சீர்திகழ் மேலைக் கொழுந்தா மலைவாழ்
தேவா! செங்கோ செங்கீரை
சிந்தையி லன்பு தெளித்திடுங் குமரா
செல்வா! செங்கோ செங்கீரை.

5 கண்கண்ட தெய்வமாக் காணரும் வீரனே!
கலபமிசை வருதீரனே
கனிவாங்க உலகனைத் தும்சுற்றி விரைவினொடு
கனமதனில் வந்தகுகனே.

பெண்கொண்ட வள்ளியொடு புனந்தோட்ட வேடனே
பொய்மைகீ ராடுகுணனே
புனமதனில் மாவொன்று வந்ததோ வெனவினு
புதுக்கிட்ட மேன்மையோனே.

விண்கொண்ட மலையமார் குடமுனிக் குபதேசம்
விளக்கிட்ட ஞானவடிவே
வேதாக மங்களுர் தேடுகுண மூலனே
வேலாயு தக்கடவுளே.

திண்கொண்ட மேலைக் கொழுந்துமலைத் தேவனே
செங்கீரை யாடியருளே
திமிதிமியென் ருடிமயில் விரைவினொடு வருபவா
செங்கீரை யாடியருளே.

---

# 3. தாலப்பருவம்.

1 ஒளிவளரு பன்னிரு கண்களுந் துயிலவோர்
உபாயமதும் யாதென்னவே
உளமுந் தெளிந்திடாத் துழலுகைத் தாபரும்
உன்மத்த மாகிநிற்பக்

கழிமகிழத் தொட்டிற் கிடந்துமென் கால்விரற்
கனிவா யிதழ்பொருந்தக்
கனியச் சுவைத்தமுது கண்டிடும் மழலையே
கற்பகத் தருவினிழலே.

மொழிவளரு வாய்மலர்ந் தமுதூற் கேட்டுநால்
வேதங்களும் பயிலவே
மேலைக் கொழுந்துமலை மேவுதும் வேலனே
மெல்லமணி கண்வளரயே.

தளிவளரு மூலனே! சண்முகக் குழந்தையே
தாலேலோ தாலதாலோ
சரவணப் பொய்கைவள ருமைமாற் செல்வனே
தாலேலோ தாலதாலோ.

2 காணார் வள்ளி மடவார்பாற்
காதற் கொண்ட கடைக்கண்ணும்
கனியக் கனிய உளநெகிழக்
கவிஞர்க் கருளும் படைக்கண்ணும்.

தேனார் புனத்தின் வளநலமுந்
தேர்ந்து கண்ட திருக்கண்ணும்
தேடு வார்க்குத் திருவருளும்
திளைக் கொடுக்கு விழிக்கண்ணும்.

வானா ரமுத மழைக்கண்ணும்
மையு மெழுதா வளர்கண்ணும்
மனதில் நினைப்பார்க் கருள்சுரந்து
வழங்க நிற்குந் திருக்கண்ணும்.

கூனார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா தாலே தாலேலோ
குமையா நின்றே கண்வளருங்
குழந்தாய் தாலே தாலேலோ.

3 காவா யென்றே யேத்துநர்க்குக்
கருணை செய்தே கடைக்கணிக்குங்
கடவுள் மணியே! காரவுணர்க்
கருவைத் தொலைத்த கற்பகமே.

பூவார் கடம்ப மார்பகமும்
புழுகு களப வெண்ணீறும்
பொலிய வெயிலு நிலவுமிழப்
பூரித் தழகு பார்த்துவக்கும்.

தேவார் ஞானச் செவ்வேளே!
தெவிட்டாச் சுவையின் தீங்கரும்பே!
தித்தித் தொழுகும் பேரமுதே!
திளைக் கிடையாக் கனிரசமே.

கோவார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா தாலே தாலேலோ
குருவா நிற்குங் குருபரனுங்
குழந்தாய் தாலே தாலேலோ.

4 தெண்ணீர்க் கடலி னுட்புக்குச்
சேர வொழித்த சூர்வலிமை
தோற்க வடிவேல் விடுத்துயிரைத்
தொலையாக் குடித்த செவ்வேளே.

பண்ணேர் பாடல் செவிமடுத்துப்
பாலித் தருளும் பண்புயர்வே
பரவு வார்தம் அன்புவலைப்
படியும் ஞான சிவக்கொழுந்தே.

திண்ணேர் வலிமை திரளமலை
சேர வுருட்டி விளையாடும்
தீர வடிவே இளைஞனே.

கோண்மூ மேலைக் கொழுந்துமலைக்
குமரா தாலே தாலேலோ
குருவா நிற்கும் குருபரனுங்
குழந்தாய் தாலே தாலேலோ.

5 பால வடிவா யழகமையப்
பார்ப்பார் தமக்கு மயலூறப்
பணிவார் தமக்குப் பரவசமும்
பரந்த உளத்திற் பெருமகிழ்வும்

சில மாண்பு முண்டாகச்
செய்யு நின்றன் திருவழகு
சொல்லிச் சொல்லி நின்றுலும்
சுவைசெய் தின்பம் பாலிக்கும்

ஏதும் பெருமை எடுத்துரைக்க
யாவர் வல்லார் இருநிலமே
எழிலார் ஆறு படைவீடே
இடமாக் கோயிற் கொண்டருளும்

கோல வடிவே குளிர்மேலைக்
கொழுந்தா மலையா தாலேலோ
குருவா நின்றே யருள்புரியுங்
குழந்தாய் தாலே தாலேலோ.

# 4. சப்பாணிப்பருவம்.

1 திருவளரு செல்வனே தேசுமலி வீரனே
சேவலங் கொடியாளனே
சிவனார் நுதற்கணரு பொறியாகி நின்றநற்
சோதியுரு வானகுகனே.
மருவளரு மார்பனே வள்ளலங் கையனே
மயில்வா கனக்கடவுளே
வாசங் கலந்தமண வீசுங் கலப்பமுத
வாய்ச்சொ லுதிர்க்குமலனே.
குருவளரு மேன்மையோ டுபதேசஞ் செய்திடும்
கொள்கையுப காரகுணனே
கோருமடி யார்துயர் தீரவருள் செய்திடும்
கோலாக லாபகுகனே.
தருவளரு மேலைக் கொழுந்துமலைச் சண்முகா
சப்பாணி கொட்டியருளே
சமயங்க டோறுநின் றமையாத வேலவா
சப்பாணி கொட்டியருளே.

2 பத்தி வயத்துப் பரவசத்துப்
பாற்கா வடிக ளெடுப்பவரும்
பலகால் நோன்பு தவமுயன்று
பயனு ரன்பு தொடுப்பவரும்
சித்தி வகையில் வல்லாரும்
தினமுந் தொழுது நிற்பவரும்
தேவே யென்று திருவடிகள்
தெண்ட னிட்டே தொழுபவரும்
பித்தந் தெளிய மருந்தெனக்குப்
பிள்ளாய் தருவா யென்பாரும்
போற்று வாராய் நின்கோயிற்
பொருந்தா நிற்பர் புதுமையோ?
கொத்தின் மேலைக் கொழுந்துமலைக்
குமரா கொட்டாய் சப்பாணி
குழந்தை வடிவாய் வந்துதித்த
குகனே கொட்டாய் சப்பாணி.

3 வான்முகடு இடுஇடென மாதலம் திடுதிட்டெ
மலைகளும் பொடிபடெனவே
மத்திடைப் பட்டதயி ரென்னமன் னுயிர்களும்
மனமுளைந் திரியல்செயவே.

கானிடைப் பட்டபல வாவியுஞ் சுனைகளும்
கலங்கித் தெளிந்தயரவே
கார்த்திகை மாதரும் அருகினின் றுடவே
காதலித் தன்புசெயவே.

தேனிடைப் பட்டமலர்ச் செண்பக வாசமுஞ்
சேரத் திரண்டுமெழவே
செயசெயென மெய்யடியர் துதிசெய்து நிற்கவே
தேவாதி தேவர்தொழவே.

தானுயரு மேலைக் கொழுந்துமலைச் சண்முகா
சப்பாணி கொட்டியருளே
சமயங்க டோறுநின் றமையாத வேலவா
சப்பாணி கொட்டியருளே.

4 மாலாதி பிரமனும் மற்றுமுள தேவரும்
மன்னுயிர்த் தொகையாதியும்
மாண்புயரு மெண்டிசைக் காவலுயர் மன்னரும்
மாதேவ னுந்தேவியும்.

கோலாக லாபமொடு மெய்யடியர் கூட்டமும்
குறமாதர் தங்கள்குழுவும்
கோடாநு கோடிதவ யோகியர் தங்குழும்
குறைபிரந் தருள்கவென்றே.

வேலாதி வேலென வேண்டிப் பணிந்திடும்
விதமுமென் னென்றுசொல்கேன்
விஞ்ஞான நிபுணரும் மெய்ஞ்ஞானர் தங்குழும்
வேண்டியே காணநிற்பார்.

தாலான மேலைக் கொழுந்துமலைச் சண்முகா
சப்பாணி கொட்டியருளே
சமயங்க டோறுநின் றமையாத வேலவா
சப்பாணி கொட்டியருளே.

5 பொதியமால் வரைவரு குறுமுனிக் கருணலம்
புரிபவா கொட்டுக சப்பாணி
புதுமண மலர்திக ழணிமுடி மௌலியும்
பொலிபவா கொட்டுக சப்பாணி.

கதியிலை யெனவுனைத் தொழுபவர்க் கின்பமுங்
கணிப்பவா கொட்டுக சப்பாணி
கனிதரு சொல்லமு துதிர்பவ ளத்திருக்
கந்தா கொட்டுக சப்பாணி.

சதிமதி புனைசடை சம்பனுர் தன்மக
னலமே கொட்டுக சப்பாணி
சற்சிவ சண்முக வரதா மயில்வரு
நாதா கொட்டுக சப்பாணி.

குதிகொளு மேலைக் கொழுந்தா மலையா
குமரா கொட்டுக சப்பாணி
குழந்தைநல் வடிவாங் குருபர குகனே
குமரா கொட்டுக சப்பாணி.

# 5. முத்தப்பருவம்

1 குருவளரு ஞானேப தேசமுஞ் செய்திடும்
குமரரா யகதேவனே
கொஞ்சுமொழி வள்ளியொடு கோலாக லாபமாக்
கூடிமகி ழுங்குழகனே.

திருவளரு செல்வனே தேசுமய மானசற்
சிங்கார வடிவேலனே
செக்கச் சிவந்தநிற மிக்கபே ரழகனே
தேவாதி தேவகுகனே.

மருவளரு பங்கிரு தேவியொடு வாழ்வனே
மகரயா ழிசைகேட்பனே
வளருபன் னிருகண்க ளொளிரவருள் புரிவனே
மன்னுயிர்க் கின்பவலனே.

கருவளரு மேலைக் கொழுந்துமலைக் கந்தனே
கனிபவள முத்தமருளே
கரும்பினிமை விரும்புதமி ழரும்புமிதி காசனே
கனிபவள முத்தமருளே.

2 சத்தஞ் செய்யுங் கடலலைவாய்
தங்கும் பெருமை மேன்மைநலம்
தரணி தன்னி லெளியேனுற்
சாற்றப் போமோ? சண்முகனே

நித்தந் தொழுவார்க் கருணலமும்
நீடத் தருநின் பெருங்கருணை
நினையு தோறும் உளமெகிழா
நிலையு மடையு நிர்மலனே

வித்து மின்றி முளைத்தெழுந்து
விரிநீ ருலகி லெங்கணுமே
விரவா நின்று பரந்தொளிரு
வேதா கமனே வேலவனே

கொத்தின் மேலைக் கொழுந்துமலைக்
குமரா தருக முத்தமே
குழையும் பவளக் கனிவாயால்
குழந்தாய் தருக முத்தமே.

3 முத்தந் தந்தால் வாயமுத
மொழிகள் சிதறி விடுமென்றோ?
விருப்புங் கனியின் சுவைரசமும்
வெள்ளந் திரண்டு விடுமென்றோ?

முத்தந் தாரா திருப்பதுவும்
முருகா வுனக்கிங் கழகாமோ?
மெய்ம்மை பன்புத் தொழும்பரில்பான்
விளைக்கும் பக்திக் குறைவுளதோ?

பித்தந் தெளிக்கும் பெருங்கருணைப்
பிள்ளாய் மேன்மைப் பேராளா!
பெருமான் நுதற்க ணுறுபொறியாப்
பிறங்கு சோதி யருளாளா

கொத்தின் மேலைக் கொழுந்துமலைக்
குமரா தருக முத்தமே
குளிரா ரமுத மழைவிளைக்குங்
குழந்தாய் தருக முத்தமே.

4 அன்னை படிப்பா ளென்றோநீ?
அயலார் சிரிப்பா ரென்றோநீ?
அன்பா வளர்க்குங் கைத்தாயர்
ஆணை யிடுவா ரென்றோநீ
என்பா லன்புக் கிரங்கியுமே
இடாத தென்கொல்? முத்தமே
எளியார்க் கிரங்கு நின்கருணை
எங்கே யொழித்து நின்றதோ?
உன்பா லன்புக் கடையனோ?
உண்மை யிதுவோ உணராயோ?
ஓதற் கரிய முதற்பொருளை
உணர்த்தா நின்ற வுண்மையனே
கொன்பான் மேலைக் கொழூர்துமலைக்
குமரா தருக முத்தமே
கூடும் பவளக் கனிவாயால்
குழந்தாய் தருக முத்தமே.

5 தாய்தந்தை யாரிட்ட முத்தமோ அளப்பில
தழையுநட் புறவுசுற்றம்
தந்திட்ட முத்தமும் சிந்திக்க வெண்ணில
தங்குதுணைக் காதன்மடவார்.

ஏயமகிழ் கொண்டுதரு முத்தமுங் கணக்கில
இன்பநல மேதுமில்லை
இணையிலா நீதரும் முத்தமதுங் கோருவன்
இறைவனே மனமோகனே.

தூயதாஎ தொண்டருக் கருள்நலந் தந்திடும்
சோதிமய மானகுகனே
நினைப்புனக் குறமாது மனத்தடம் தொட்டநற்
சேவற்ப தாகைவலனே.

கோயில்திரு மேலைக் கொழூர்துமலைக் கந்தனே
குமரனே முத்தமருளே
குளிர்தவழு வெண்ணகை பொழியுமதி மோகனக்
குழந்தையே முத்தமருளே.

# 6. வாரானைப் பருவம்.

1 அலகிற் புவன மடங்க னிலவும்
அமலன் வருக வருகவே
அடியர் மனமு நெகிழ மகிழ்வு
மரும்பு குழகன் வருகவே
திலக மலையு நுதலு விரிந்த
செழுமை யழகன் வருகவே
தினமுந் தொழுவ ரிதய நிறையு
சுகிர்தன் வருக வருகவே
இலகு பெருமை நிலவு கருணை
யெழிலன் வருக வருகவே
இடரு களையு களையு முருகன்
இனியன் வருக வருகவே
குலவு குளிரு வளங்கொண் மேலைக்
கொழுந்தா மலையன் வருகவே
குமரன் அழகன் அமரன் குழகன்
குழந்தை வடிவன் வருகவே.

2 வாரா திருந்தால் மனக்கவலை
மாற்று பவரும் எவரேகாண்!
மனமு மகிழப் பெருவாழ்வு
வழங்கு பவரு மெவரேகாண்!
தீரா வீரா திறல்வேலா
சேவற் கொடியா தேனமுதா
தெவிட்டா இன்பத் தமிழமுதம்
திரட்டா நிற்கும் இளங்குமரா
சீரார் வள்ளி தெய்வானை
சேருங் குழகா வடிவழகா
சிந்தைக் கினியா தேவர்துயர்
தீர்க்குங் குமரா அருமருந்தா
கூரார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா வருக வருகவே
கோலா கலப மயிலேறுங்
குழந்தாய் வருக வருகவே.

3 அழைத்தால் நீயும் வாராயோ?
அடியர் துயரந் தீராயோ?
அருமை பெருமை யறியாயோ?
அறிதற் கரிய பெருமானே?
பிழைத்தால் பொறுக்க வேண்டாவோ?
பிள்ளைப் பெருமான் நீயலவோ?
பேசும் பெருமை நின்றனுக்கே
புகழார் மேன்மை யுலகினுக்கே
களைத்தால் மனமுந் தேற்றாயோ
கர்தா குகசண் முகவேலா
கடைக்க ணோக்கிக் கருணாநலங்
காட்டாய் காட்டாய் மயிற்பாகா!
குழைத்தார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா வருக வருகவே
கோலா கலப மயிலேறுங்
குழந்தாய் வருக வருகவே.

4 வருவா யாகில் மனக்கவலை
மாற்றி யருள்செய் வாயாகில்
வாழ்வும் பேறும் புகழ்நலமும்
வழங்கி யின்பந் தருவாயேல்
உருவா அருவா அருவுருவா
உணர்தற் கரிய வடிவோனே
உண்மை யன்புத் தொழும்பரொடும்
உடனு நின்றுந் தொழுதெழுவேன்
கருவா மருந்தாக் கருமருந்தாக்
கருவூ லத்தின் பழம்பொருளாக்
கனியாக் கனியின் சுவைரசமாக்
கலவா நிற்கும் பேரமுதே!
குருவா நிற்குங் கொழுந்துமலைக்
குமரா வருக வருகவே.
கோலா கலப மயிலேறுங்
குழந்தாய் வருக வருகவே.

5 தெருளார் ஞானத் தொழும்பரொடு
தினமும் நின்று புகழ்செய்வேன்
தெவிட்டா நிற்குஞ் செழுந்தமிழில்
தேனின் சுவையிற் கவிவடிப்பேன்
அருளா ரமுதம் அளைந்துண்பேன்
அருமை நலமும் போற்றிடுவேன்
அன்பா தாவின் பத்திமையால்
அகமும் நெகிழ மகிழ்கொள்வேன்
மருளார் மயக்கந் தெளிந்திடுவேன்
மருகா வென்றே வாழ்த்திடுவேன்
வளர்கண் மணியே யென்றுன்னை
வாயால் அமுதம் பொழிந்திடுவேன்
குருவார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா வருக வருகவே.
கோலா கலப மயிலேறுங்
குழந்தாய் வருக வருகவே.

---

# 7. அம்புலிப்பருவம்.

1 இடபத்தி லேயுச்சம் பெற்றனை யென்னிலென்
இளங்குமர னுச்சம்பெற்றான்
எங்கெங்கே யென்னிலோ? இயம்புதல் கேளாய்நீ
எழிலாறு படைகொள்வீடே.

நடபத்தி வானத்தி லேயுலவ நின்றனை
சண்முக னுலவிநின்றான்
தளிர்கலப மயிலென்று காணுயோ? அம்புலீ
சங்கரன் மைந்தனலையோ?

கடைபத்தி வெண்ணகை காட்டுறாற் கந்தனுங்
காட்சியில் வெற்றிபெற்றான்
காதலுய ராதித்தன் நண்பன்செவ் வாயெனக்
காட்டுவான் கனிதமுணராய்.

குடபத்தி மேலைக் கொழுந்துமலை வேலனொடு
கூடிமகிழ்ந் தாடவாவே
குறைந்துகுறைந் தேதேய்ந்து நிறைந்துவள ரம்புலீ
குமரனே டாடவாவே.

2 செக்கச் சிவந்தநிறத் தழகனும் குமரனுன்
திகழொளிக் கிணையுமாவன்
திக்கெட்டும் போற்றுநின் சோதிக்கு மின்னவன்
சுடருவெண் ணீற்றினொளிகாண்.
தக்குமோர் ராசியில் ரெண்டேகால் னாட்கள்நீ
தங்குநின் பெருமையறிவான்
தளிர்பசும் மாமயில் ஊர்ந்திவ னுலகெலாம்
தானுமே சுற்றிவருவான்.
மிக்கபே ரறிஞனும் விண்ணவர்க் கருள்வனும்
மேதக்க கலையாளனும்
விரிந்தநின் கலைகளுக் கதிகமாங் கலைகளும்
விஞ்ஞான மாய்க்கற்பனும்.
கொக்குயரு மேலைக் கொழுந்துமலை வேலனொடு
கூடிமகிழ்ந் தாடவாவே
குறைந்துகுறைந் தேதேய்ந்து நிறைந்துவள ரம்புலீ
குமரனோ டாடவாவே.

3 குளிருவெண் ணகையொடு நிலவுமிழ் செய்திடக்
குமரனோ டாடுக அம்புலியே
குலவுயர் வள்ளிதெய் வானைநன் மகிழ்நனின்
குணமறிந் தாடுக அம்புலியே.
பழிவினை பவங்கடிந் தின்பமும் பாலிக்கும்
பண்பனோ டாடுக அம்புலியே
பரவச மாகநின் றாடிடும் அடியவர்
பயன்பெற வாடுக அம்புலியே
கழிமகிழ் கொளவிருந் தமுதமும் பாலிக்கும்
கந்தனோ டாடுக அம்புலியே
கதிதரு புதுநலம் விளைந்திடும் மோகனக்
கண்யனோ டாடுக அம்புலியே.
குளிர்தரு மேலைக் கொழுந்தா மலைதிகழ்
குமரனோ டாடுக அம்புலியே
குழந்தையாம் வடிவொடு பழகுயர் குகனொடு
குணமதா யாடுக அம்புலியே.

4 தேய்ந்து வளருந் திறனுடையாய்
சிறந்த கலைகள் நிறைவுடையாய்
தெண்ணீர்க் கடலும் பொங்குதற்காம்
செழுமை பிறங்கு வளமுடையாய்
ஆய்ந்து நோக்கிற் குமரனுக்கும்
ஆகாய் உவமை யென்பதுவும்
அறியாய்! அறியாய்! அறியாய்கொல்!
அடர்செவ் வான அம்புலியே!
பாய்ந்து நிலவும் வெண்ணொளியால்
பணியு வளர்க்கு நின்பெருமை
பாராட் டாது நிற்பார்யார்!
பயனும் புகழார் யாவர்காண்!
கோயின் மேலைக் கொழுந்துமலைக்
குமர னோடும் ஆடுகவே
குழந்தை வடிவா யழகுசெயுங்
கோமா னோடும் ஆடுகவே.

5 சீர்பெற்ற செந்தமிழ்க் கன்புகலஞ் செய்வனும்
தேவாதி தேவகுணனும்
தெய்வானை வள்ளியொடு வாழ்வுயர்த் தும்பெருமை
தீராதி தீர குகனும்.
பார்பெற்ற பூவுலகும் மேனுலகும் வலம்வரும்
பசுமைநிற மயில்வாகனும்
பாராட்டு மேன்மையொடு சீராட்டு வேலனும்
படைவீடு தங்குகலனும்.
தேர்பெற்ற செந்திலைக் காவன்மட மாதொடு
தினைக்குவடி வேல்முருகனும்
சிந்தைமற வாதுதுதி செய்பவர்க் கருணலம்
தேடிக் கொடுக்குபரனும்.
ஆர்பெற்ற மேலைக் கொழுந்துமலை யாளனோ
டம்புலீ யாடவாவே
அழகுயரு மயிலேறிப் பழகுவடி வேலனோ
டம்புலீ யாடவாவே.

# 8. சிற்றிற்பருவம்.

1 கானக் குறவர் மடவரொடு
கலந்தின் புறுவர் காதலுற
களிறும் பிடியு மொருசுனையிற்
காத லுறவே நீரருந்தும்
ஏனற் புனத்து மடமாதர்
இடுகல் கவணாற் கையினரா
இரைதே டிடற்குத் தினைகொய்யும்
எழிலார் பறவை யினங்களையும்
தேனக் கலரும் குரலெழுப்பித்
திசைகள் திரிய ஓட்டுவராம்
சிறுவர் மடமான் றோலுடுத்துத்
திரிவர் புறவின் மருங்கிடமே
கூனற் குன்றும் குளிர்மேலைக்
கொழுந்தா மலையா சிதையேலே
குழந்தை வடிவா யிலங்குகுணக்
குமரா சிற்றிற் சிதையேலே.

2 கருங்கற் பாலால் வீடமைத்துக்
கவினுற் புலனு லழகமைத்துக்
காணற் கரிதா யலங்கரித்துக்
காட்சி நலமுந் தோன்றிடவே
நறுமாங் கனியின் ரசம்பிழிந்து
நனிதே னாறுஞ் சுவைவடித்து
நலமார் தினையி னமுதமைய
நற்சோ றிடுவோம் பெறுவாயே
தெருளார் ஞான செவ்வேளே
தேடற் கரிய சிவமயமே
சிந்தைக் கினிமை திரட்டுகுணத்
தேவே இன்பப் பெருவடிவே
குருவா கிற்குங் குளிர்மேலைக்
கொழுந்தா மலையா சிதையேலே
குழந்தை வடிவா யிலங்குகுணக்
குமரா சிற்றிற் சிதையேலே.

3 தெருளார் ஞான தேசிகனே
சிறுவா சிற்றிற் சிதையேலே
தெவிட்டா வமுதின் தீங்கரும்பே
சுவையே சிற்றிற் சிதையேலே
மருளார் மையல் மயக்கறுக்கும்
வாழ்வே! சிற்றிற் சிதையேலே
வளர்கற் பகமே! வாரிதியே!
மணியே! சிற்றிற் சிதையேலே
கருவார் குழியில் விழாதணைக்கும்
கடவுள் வடிவே சிதையேலே
கனியக் கனியப் பாடுநர்தங்
கருத்தின் தெளிவே! சிதையேலே
குருவார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா சிற்றிற் சிதையேலே
குழந்தை வடிவா யிலங்குகுணக்
குகனே சிற்றிற் சிதையேலே.

4 சீர்வள ரின்பத் திறனூர் குமரா
சிறுவா சிற்றிற் சிதையேலே
தெளிவுயர் ஞானம் அருளுயர் மைந்தா
செல்வா சிற்றிற் சிதையேலே
கார்வளர் மேன்மைக் கருணையி னலமே
கனியே சிற்றிற் சிதையேலே
கனிதரு பவளக் கலப்பித முழுதக்
கசிவே சிற்றிற் சிதையேலே
தேருபர் புலமைத் தெளிவினர்க் கருளுந்
திறனே சிற்றிற் சிதையேலே
தேடிடற் கரிய வீடது நல்கும்
சீலா சிற்றிற் சிதையேலே
கூர்வளர் மேலைக் கொழுந்தா மலையா
குமரா சிற்றிற் சிதையேலே
கோருவார்க் கின்பச் சீரது நல்குங்
குழந்தாய் சிற்றிற் சிதையேலே.

5 பாடும் அடியர்க் கருணாலயமும்
பாலித் தருளும் பாலகனும்
பரவிப் பரவித் தொழுவார்தம்
பக்கத் துணையு மமைந்தவனும்
தேடும் அடியர் சிந்தையினில்
தெவிட்டா இனிக்கும் திறன்மயனும்
செக்கச் சிவந்த திருமேனி
சேரப் படைத்த சோதியனும்
நாடும் பொருள்கை கூடிடவே
நல்கும் மேன்மை நலத்தவனும்
நமனார் விரிந்த திருநுதற்கண்
நாட்டத் தெழுந்த குணத்தவனும்
கூடும் மேலைக் கொழுந்தமலைக்
கோமான் சிற்றிற் சிதையேலே
குழந்தை வடிவா யிலங்குகுணக்
குமரன் சிற்றிற் சிதையேலே.

## 9. சிறுபறைப்பருவம்.

1 விண்மண்ட லத்தொளிரு மின்மினி திடுக்கிட
வேதாக மங்களயர
வேதாள பூதங்கள் வெருவியே திரிந்திட
விண்ணவர் கேட்டஞ்சிடக்
கண்மண்ட லக்கடவுள் கயிலாய மலயமும்
காவேரி நதிகள்முதலாம்
கடலேழு பிலமுதலாம் பாதாள மேழுமே
கலீரென்ன வோசைகேட்டு
மண்கொண்ட ஊழியும் வந்ததோ? வென்றஞ்சி
மருண்டங் கயர்ந்துநிற
வானத்து லாவுமதி யாதித்த கோளமும்
மன்னுயிர்த் தொகையுமிரளத்
திண்கொண்ட மேலைக் கொழுந்தமலைச் சேவகா
சிறுபறை முழக்கியருளே
திடுதிடெனத் தாளமொடு கிடுகிடென மேளமொடு
சிறுபறை முழக்கியருளே.

2 காவடிகள் கொண்டுவரு மாவடியர் கூட்டமும்
காணவரு வார்கூட்டமும்
கந்தாரு காவென்று சிந்தையினி லன்புறக்
காதலிப் பார்கூட்டமும்

பூவடிகள் கொண்டுமலர் தூவுவார் கூட்டமும்
பூசிப்பார் தங்கூட்டமும்
பேணுதவ மாதவர் யோகியர் கூட்டமும்
பேராவ லோடுகேட்கப்

பாவடிகள் கொண்டுதமிழ் பாடுவார் கூட்டமும்
பரவசத் தார்ப்புசெய்யப்
பத்தியோ டன்புயரு சித்தியர் கூட்டமும்
பணிவாக நின்றுகேட்கத்

தூவுமுகின் மேலைக் கொழுந்துமலைச் சேவகா
சிறுபறை முழக்கியருளே
திடுதிடெனத் தாளமொடு கிடுகிடென மேளமொடு
சிறுபறை முழக்கியருளே.

3 விண்ணவர்க் கின்பமு விளைந்திடச் செய்தருள்
வித்தகா முழக்குக சிறுபறையே
வேதாக மங்களுநங் காணுறும் தீரனே
வீரனே முழக்குக சிறுபறையே

பண்ணவர்க் கன்புமே பாலித் திடுங்குணப்
பண்பனே முழக்குக சிறுபறையே.
பல்லியந் துந்துபி காளமும் நாணுறப்
பாலனே முழக்குக சிறுபறையே

தண்ணளி செய்திடும் சங்கரன் மைந்தனே
சண்முகா முழக்குக சிறுபறையே
சமயங்க டோறுநின் றுதாரம் நல்கிடும்
சக்திவேல் முழக்குக சிறுபறையே.

கொண்முகின் மேலைக் கொழுந்தா மலையா
குமரா முழக்குக சிறுபறையே
குழந்தையின் வடிவா யழகுயர் சோதிக்
குகனே முழக்குக சிறுபறையே.

4 வெண்சங்க நாதமொடு பம்பையெழு தாளமும்
விண்ணொலியு செய்துநிற்ப
மெய்யடியர் தங்குழும் வேலாயு தாவென்று
வேண்டிப் பணிந்திறைஞ்ச
எண்கொண்ட பாற்குடக் காவடிகள் பேரொலி
எங்கும் பரந்துவிம்ம
ஏழண்ட கோளமும் கிடுகிடென ஆர்த்திட
இணையிலா மெய்யர்தாமும்
கண்கொண்ட தானவாய்ப் பூட்டியொடு வேல்நுதி
கணக்கிலா மேனிதாங்கக்
காவடிகள் கொண்டுதமிழ்ப் பாவடியா லேத்திடும்
கடலொலியு வானளப்பத்
திண்கொண்ட மேலைக் கொழுந்துமலைத் தேவனே
சிறுபறை முழக்கியருளே.
செயசெயெனப் போற்றடியர் துள்ளொலியு நாணிடச்
சிறுபறை முழக்கியருளே.

5 வெள்ளத் திரண்டெழுவே வந்ததோ? வெனகடல்
விள்ளுபே ரொலியுநாண
வேதாக மங்களும் ஓதுவார் தங்குழும்
வெருண்டே மருண்டுதிரியத்
துள்ளுமறி மானினம் களிறினந் திரிந்திடத்
திசைகள்தெரி யாதுநிற்பச்
செக்கர்நெடு வான்முகடு துள்ளுபே ரிடிகளும்
திரண்டதோ வென்றுமருளத்
தெள்ளுங் குறிஞ்சியாழ்ப் பண்களொடு கானவர்
திரளொலியு கேட்டுநாணத்
திக்கெட்டு மிக்கபே ரொலிகேட் டயர்ந்திடத்
தேவாதி தேவர்பிரானத்
தொள்ளைசெயு மேலைக் கொழுந்துமலைத் தேவனே
சிறுபறை முழக்கியருளே
செயசெயெனப் போற்றடியர் துள்ளொலியு நாணிடச்
சிறுபறை முழக்கியருளே.

# 10. சிறுதேர்ப்பருவம்.

1 தாங்கும் பெருமைக் கைத்தாயர்
தாமும் வியப்பத் தங்குபுகழ்
சமையு முமையாள் மனங்களிப்பச்
சாரும் அடியா ருருகுவரத்
தூங்கும் கொடிஞ்சித் திண்டேரின்
திகழுங் குடுமித் தலமசையத்
தோரா ணங்கள் நிலைதிரியச்
சுகந்த மணமும் திசைவிரிய
ஏங்கும் கொடிகள் நின்றாட
எழிலார் விண்ணோர் கொண்டாட
இயலார் சங்கம் நின்றாத
இயங்கும் பறைக ளிணைந்தாடக்
கோங்கார் மேலைக் கொழுந்துமலைக்
குமரா உருட்டாய் சிறுதேரே
குழந்தை வடிவாய் வந்துதித்த
குகனே உருட்டாய் சிறுதேரே.

2 பூதகணம் நின்றாடப் பூவுலகு தானாடப்
பொங்குதண் கடலுமாடப்
புத்தேளிர் வானமும் பேரிடிகள் தானாடப்
பேய்மகளிர் குழுவுமாட
வேதகணம் நின்றாட மெய்யடியர் தங்குழும்
விதவித மாகவாட
விஞ்ஞான யோகியர் மெய்ஞ்ஞான இன்பமும்
விளைவுதரு மகிழ்வுமாடப்
போதமுயர் சிவஞான மாதவர் நின்றாடப்
புனிதமறை கலைகளாடப்
பூசிக்கு மெய்யடியர் வாழ்த்தொலியி னுதமும்
பெய்யுமழை யெனவாடவே
சீதமுயர் மேலைக் கொழுந்துமலைச் செல்வனே
சிறுதே ருருட்டியருளே
திரண்டுயரு சகடங்க ளுருண்டுவர வேலனே
சிறுதே ருருட்டியருளே.

3 திருமலி நுதலின் வெயர்வைக ளரும்பச்
செல்வனே உருட்டுக சிறுதேரே
செயசெய எனவே தொண்டர்கள் திரளச்
சீலனே உருட்டுக சிறுதேரே

அருண்மலி ஞான அமலனே இன்ப
அழகனே உருட்டுக சிறுதேரே
அடியவர் பலரும் விரைவொடு வரவே
அரசனே உருட்டுக சிறுதேரே

தெருண்மலி மோனர் சூழ்தர மேன்மை
திகழ்வனே உருட்டுக சிறுதேரே
திறல்வலி வீரர் படையொடு திகழத்
தீரனே உருட்டுக சிறுதேரே

குருவுயர் மேலைக் கொழுந்தா மலைவாழ்
குமரனே உருட்டுக சிறுதேரே
கொழிதமிழ்க் குதவுங் குழகனே மேன்மைக்
குமரனே உருட்டுக சிறுதேரே.

4 சந்த்ராதி சூரியர் சகடமீ ரெண்டாகத்
தங்குவான் தட்டுமாகச்
சதுர்மறைகள் நான்குமே பூட்டிடும் பரியாகத்
தானும்சா ரதியேயாக

இந்த்ராதி தேவர்கள் சூழவரு படையாக
இடும்பனொடு வீரவாகும்
இணையிலாக் காவற்செயு வீரர்க ளாகவே
இயங்குநின் தேர்மகிமையும்

செந்தமிழிற் பாமாலை சூட்டிட நின்றனின்
திருவருட் டுணைவேண்டுவன்
தேவாதி தேவர்தொழு தீராதி தீரனே
செங்கணுயர் மால்மருகனே

சிந்துகனி மேலைக் கொழுந்துமலை வேலனே
சிறுதே ருருட்டியருளே
திரண்டுயரு சகடங்க ளுருண்டுவரச் செல்வனே
சிறுதே ருருட்டியருளே.

5 செந்தமிழ்ப் பாடுவார்க் கின்பவாழ் வருளவே
தொண்டருக் கன்புதரவே
செயசெயெனப் போற்றடியார்க் காதரம் நல்கவே
திருவருட் டுணைசெய்யவே.

வந்துநின் திருவடி தொழுவார்தம் வல்வினை
மறைந்தும் பொடியாகவே
வாயார வாழ்த்துவார் ஓயாது நின்புகழ்
வளமாகப் பாடிவரவே.

நொந்துவந் தார்துயர் நீங்கவே இன்னலும்
நீளாப் பறந்தகலவே
நித்தமும் நினைபவர் சித்தமு மகிழ்கொள
நேயங்கொண் டாளுமுருகா.

சிந்துகளி மேலைக் கொழுந்துமலை வாழ்பவா
சிறுதே ருருட்டியருளே
திரண்டுபெரு சகடங்க ளுருண்டுவர வேலவா
சிறுதே ருருட்டியருளே.



## மேலைக் கொழுந்துமாமலைக் கன்னிவிநாயகர்ப் பிரதிட்டைக் கும்பாபிடேக விழா வைபவம்,



மேற்கூறிய கன்னிவிநாயகர்கோயில்; திருநெல்வேலி ஜங்ஷன் அட்வகேட் உயர்திரு: V. S. சங்கரசுப்பிரமணிய முதலியார் (B. A., B. L.,) M. L. A. அவர்கள் பொருளுதவியால் கட்டி முடிக்கப்பெற்றது. 1125௵ விகிருதி வருடம், சித்திரைத் திங்கள் மேடரவி பதினெட்டாம் நாள் ஆதித்தவாரமும், அத்த நட்சத்திரமுங் கூடிய நல்வேளை, உதயாதி நாழிகை ஏழரைக்கு மேல் பத்துக்குள்ளாக அமைந்த மிதுன இலக்கனத்தில் ஆகம முறைப்படிக் கும்பாபிடேகம் செய்யப்பெற்றது. பிரதிட்டைக் கும்பாபிடேக நாளின் காலச்சக்கரம் கீழேகுறிப்பிக்கப்பெற்றிருப்பதுங் கண்டுகொள்க.

| | | | |
|---|---|---|---|
| வெ ரா | பு. ஆ. | | ல |
| வி | | | |
| | | | சனி |
| | | | செ கே சந் |

கும்பாபிடேக வைபவங்காண ஏராளமான பெருமக்கள் வந்திருந்தனர். பிரதிட்டை, அபிடேக, அலங்காரங்கண்டு மனம்பூரித்தனர். சென்னை சட்டசபை அங்கத்தினரும் (M. L. A.) பொதுநலச் சேவையாளரும், திருநெல்வேலி ஜங்ஷன் பிரபல வழக்கறிஞரும் (அட்வகேட்) வீரவநல்லூர்ச் செங்குந்தர் மரபுத் திலகருமான உயர்திரு: V. S. சங்கரசுப்பிரமணிய முதலியார் அவர்கள் முன்னிலையில், வீரைக்கவிஞர்: கா. ந. நெல்லையப்பர் அவர்களால் மேலைக் கொழுந்துமாமலைக் குமரன் பிள்ளைத்தமிழெனும் இப்பிரபந்தம் மிகவிரிவான பொருளுரையொடு அரங்கேற்றம் செய்யப்பெற்றது.

மலைக்கோயிலின் கண் திருக்கோயிற் கொண்டருளும் பால சுப்பிரமணியப்பெருமானுக்கு அபிடேக அலங்காரம் தீபாரதனை வழிபாடுகளும் சிறப்பாக நடைபெற்றன. பாற்குடக் காவடியும், செலுத்தப்பெற்றன.

கோயில் அபிமானிகளாலும், மெய்யன்பர்களாலும், நன்றி
யறிதல் செலுத்துமுகத்தான் உயர்திரு: அட்வகேட்,
S. சங்கரசுப்பிரமணிய முதலியார் (B. A., B. L.,) M. L. A.
அவர்கட்கு வாழ்த்து இதழொன்று, பாடிநல்கப்பெற்றது.
வாழ்த்துப்பாடல்களைக் கீழே தருகிறோம்.

நன்றியும், வாழ்த்தும்.

**விருத்தம்.**

1 திகழ்சங் கரசுப் பிரமணிய

மகிழ்வா ணந்த மதிமுகத்து
மணியே! வருக வருகவே.

2 தேச சேவை பலபுரிந்து
திகழும் பெருமைக் கென்னுவமை?
பேச வல்லோம்! மிகப்பெரிதே
புகழுங் கொண்ட பெருந்தகையீர்!
தேசுந் திருவு மொருங்கமைந்த
திறனுங் கொண்ட அருணலத்தீர்!
வாசங் கலந்த தமிழமுதில்
வடித்த வாழ்த்தும் ஏற்பீரே.

3 வேயு மேலைக் கொழுந்துமலை
வேலா யுதனார்த் தென்பாலாக்
கோயி லமைத்த திருப்பணியின்
குறையு முடிக்கப் பொருளுதவி
ஆய பேரா தரவளித்த
அன்பின் வள்ளற் றன்மைக்கிங்
கேய மகிழ்வி னன்றியுமே
இனிதே செலுத்திப் போற்றுதுமே.

4 அரும்பும் சென்னை சட்டசபை
அங்கத் தினரா யிருந்துநலம்
விரும்பும் சேவை பலபுரியும்
மேன்மை கண்டும் புகழ்வோமே
திருந்தும் மன்ற வழக்கறிஞர்த்
துறையிற் றிறனும் பெற்றயரும்
பெருமை கண்டும் பாராட்டிப்
புகழ்வோம் மேலும் பலவாறே.

5 நன்றி மறவா வாழ்த்துமே
நலமாப் பாடி மகிழ்கொள்வோம்
வென்றி வேழ முகத்தண்ணல்
விமலர்; கன்னி விநாயகர்தம்
மன்னும் மேன்மைப் பேரருளால்
வளர்க வாழ்வு மேலுமென
அன்பா தரவாற் றெழுதெழுவோம்
ஐங்க ரத்தன் அடியிணையே.

*மெய்யன்பர்கள்:* *வித்வான் வீரைக்கவிஞர்*

**கா. ந. நெல்லையப்பர்.**



ஆக்கியோரும் பதிப்பாசிரியருமான

## விரைக்கவிஞர், கா. ந. நெல்லையப்பர்

# முடிவுரை.

குமரப் பெருமான், உண்ணின்றுணர்த்த, அவனருட்டுணை கொண்டு பாடிய பிரபந்தங்கள் சுமார், எண்பத்திநான்கிற்கும் மேற்பட்டன. தமிழ்ப் பெருமக்களின் போாதரவாலும், முருக மெய்யன்பர்களின் உதவியாலும், வெளிவந்துள்ள பிரபந்தங்கள் ஒருசிலவேயாகும். பொருள் வசதியின்மையால் ஏற்பட்ட காரணந்தான், பிரபந்தங்கள் வெளிவராமைக்கும் காலந்தாழ்த்தி வெளிவருவதற்கும் முக்கிய குறிப்பாகும். தமிழ்ப் பெருமக்களின் போாதரவாலும் ஊக்குவிக்கும் முயற்சியிலுந்தான் பிரபந்தங்கள் வெளிவர இயலுமென்பதும் வெளிப்படையாகும்.

இந்நிலையினைத் தெள்ளிதினுணர்ந்து, பெருமக்கள், எமது பிரபந்தங்களை ஆதரித்துவந்ததுபோல் இனிவெளிவரும் பிரபந்தங்களையும் பேராவலொடு வாங்கிப்படித்தின்புற்று மகிழ்வதோடு எமது தமிழ்ப் பெருஞ்சேவையையும் பாராட்டி, ஊக்குவிப்பீர்களாக.

# நன்றி உரை.

இப் பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தத்தைப் பாராட்டித் தங்களது சாற்றுக்கவி மூலமாகவும், மதிப்புரை மூலமாகவும் எம்மை கௌரவப்படுத்திப் பெருமைசெய்த பேறிஞர்கட்கும், எம்மை ஆதரித்துவரும் தமிழ்ப் பெருமக்களுக்கும் எமது நன்றி உரித்தாகுக.

இப் பிரபந்தத்தை மிக அழகான முறையிற்
பதிப்பித்துத்தந்த
**கல்லிடை அம்பாள் அச்சகத்தினர்க்கும்**
எமது நன்றி உரித்தாகுக.

**வாழ்க செந்தமிழ் !** **வாழ்க நம் நாடு !!**

## விரைக்கவிஞரால்

## வெளிவரும் நூல்கள்.

1 சுதந்திரப் பரணி.

2 மகாத்மா காந்தியடிகள் சரித்திரம் (காவியம்)

3 பழனி ஆண்டவர்ப் பாராயணத் திரட்டு

4 சேலம். எடப்பாடி. "ஞான இன்பவெளி" ஆசிரியர், கோ. வை. சின்ன ஆறுமுக சுவாமி கலம்பகம்

மற்றும்

அம்பாள் பிரஸ், கல்லிடைக்குறிச்சி.